# சிவ பஞ்சாக்ஷர நக்ஷத்ரமாலா ஸ்தோத்ரம்

(ஆதிசங்கரர் நக்ஷத்திரங்களின் எண்ணிக்கையைக் கொண்டு 27 சுலோகங்களில் சிவபெருமானின் பெருமையை விளக்குகிறார். ஒவ்வொரு சுலோகத்தின் நான்கடிகளிலும் 'நமச்சிவாய' என்று கூறுவதால் 108 முறை இம்மந்திரத்தை உச்சரிக்கும் புண்ணியம் கிடைக்கும் வகையில் இந்த ஸ்தோத்திரத்தை அமைத்திருக்கிறார்.)

**ஸ்ரீமதா3த்மனே கு3ணைகஸிந்த4வே நம: சிவாய**
**தா4மலேசதூ4 தகோகப3ந்த4வே நம: சிவாய ।**
**நாமசேஷிதாநமத்3 ப4வாந்த4வே நம: சிவாய**
**பாமரேதரப்ரதா4னப3ந்த4வே நம: சிவாய ॥** 1

பரமாத்மாவாகவும் குணப்பெருங்கடலாகவும் உள்ன சிவனுக்கு வணக்கம்; எவனுடைய ஒளிக்கீற்றினால் சூரியனே ஒதுக்கப்படுகின்றானோ அந்த சிவனுக்கு வணக்கம்; நிலையற்ற உலகவாழ்வாகிற பாழுங்கிணறு எவனுடைய பக்தர்களுக்கு இல்லை என்று ஆகிவிடுகிறதோ அந்த சிவனுக்கு வணக்கம்; மெய்ஞானம் பெற்ற மேன்மக்களுக்கு தலையாய சுற்றமாய் இருக்கிற சிவனுக்கு வணக்கம்.

**காலபீ4தவிப்ரபா3லபால தே நம: சிவாய**
**சூலபி4ன்னது3ஷ்டத3க்ஷபா2ல தே நம: சிவாய ।**
**மூலகாரணாய காலகால தே நம: சிவாய**
**பாலயாது4 நா த3யாலவால தே நம: சிவாய ॥** 2

யமனைக்கண்டு அஞ்சிய அந்தணச் சிறுவனை (மார்க்கண்டேயனை) க் காத்த சிவனுக்கு வணக்கம்; எவனுடைய சூலத்தினால் கொடிய தக்கனுடைய தலை பிளக்கப்பட்டதோ அந்த சிவனுக்கு வணக்கம்; அனைத்திற்கும் மூலகாரணனாயும், காலனாகிற யமனுக்கும் காலனாகவும் இருக்கும் சிவனுக்கு வணக்கம்; அருளுக்கிருப்பிடமானவனே இன்றே காத்தருள்; சிவனாகிய உமக்கு வணக்கம்.

**இஷ்டவஸ்து முக்2யதா3ன ஹேதவே நம: சிவாய**
**து3ஷ்ட தை3த்யவம்ச தூ4மகேதவே நம: சிவாய ।**
**ஸ்ருஷ்டி ரக்ஷணாய த4ர்மஸேதவே நம: சிவாய**
**அஷ்டமூர்த்தயே வ்ருஷேந்த்3ரகேதவே நம: சிவாய ॥** 3

வேண்டிய பொருளை சிறப்பாகத் தரு வோனாகிய சிவனுக்கு வணக்கம்; கொடிய அரக்கர் குலத்தை அழிக்கும் நெருப்பாக இருக்கின்ற சிவனுக்கு வணக்கம்; சிருஷ்டித் தொழிலையும் காத்தல் தொழிலையும் செய்து கொண்டு அறநெறியெனும் பாலமாக அமைந்துள்ள சிவனுக்கு வணக்கம்; (நிலம், நீர், நெருப்பு, காற்று, ஆகாயம், இயமானன், சந்திரன், சூரியன் ஆகிய) எட்டு உருவங்களைக் கொண்டவனாயும் இடபக்கொடியை உடையவனாயும் உள்ள சிவனுக்கு வணக்கம்.

**ஆபத3த்3ரிபே4த3 டங்க ஹஸ்த தே நம: சிவாய**
**பாபஹாரிதி3வ்யஸிந்து4 மஸ்த தே நம: சிவாய |**
**பாபதா3ரிணே லஸந்நமஸ்ததே நம: சிவாய**
**சாபதோ3ஷ க3ண்டனப்ரசஸ்த தே நம: சிவாய ||** 4

இன்னலெனும் மலையை வெட்டித் தள்ளும் உளியாகிற (அபய) கரத்தை உடைய சிவனுக்கு வணக்கம்; பாவங்களைப் போக்கும் ஆகாய கங்கையைத் தலையிலுடைய சிவனுக்கு வணக்கம்; பாவங்களைப் போக்குகின்றவனாயும், நம: நம: என்று தொடர்ந்து வணங்கப்படுகின்றவனாயும் உள்ள சிவனுக்கு வணக்கம்; சாபங்களால் ஏற்படும் குற்றங்களைக் கடிவதில் புகழ் மிக்கவனான சிவனுக்கு வணக்கம்.

**வ்யோமகேச தி3வ்யப4வ்ய ரூப தே நம: சிவாய**
**ஹேமமேதி3நீத4 ரேந்த்3ரசாப தே நம: சிவாய |**
**நாமமாத்ரத3க்3த4 சர்வபாப தே நம: சிவாய**
**காமனை கதானஹ்ருத்3து3ராப தே நம: சிவாய ||** 5

ஆகாயத்தையே செஞ்சடையாக உடையவனும், திவ்யமங்கள ரூபனாயும் உள்ள சிவனுக்கு வணக்கம்; பொன் மலையாகிற மேருவை வில்லாக உடைய சிவனுக்கு வணக்கம்; எவனுடைய பெயரைச் சொன்ன மாத்திரத்தில் அனைத்துப் பாவங்களும் பொசுக்கப்படுகின்றனவோ அந்த சிவனுக்கு வணக்கம். பொருள் வேட்கையிலே நாட்டம் கொண்ட இதயத்தோரால் அடையமுடியாத அச் சிவனுக்கு வணக்கம்.

**ப்3ரம்ஹ மஸ்தகாவலீநிப3த்3த4 தே நம: சிவாய**
**ஜிம்ஹகே3ந்த்2ரகுண்டலப்ரஸித்3த4 தே நம: சிவாய |**
**ப்3ரம்ஹணே ப்ரணீத வேத3 பத்3த4தே நம: சிவாய**
**ஜிம்ஹகாலதே3ஹத3 த்தபத்3த4 தே நம: சிவாய ||** 6

பிரமனின் மண்டையோடுகளை மாலையாக அணிந்துள்ள சிவனுக்கு வணக்கம்; சிறந்த நாகங்களை குண்டலமாக அணிவதில் பிரசித்தனான சிவனுக்கு வணக்கம்; பிரம்மாவின் பொருட்டு வேத நெறிமுறையை வகுத்த சிவனுக்கு வணக்கம்; கோணல் புத்தியுள்ள யமனுடைய உடலைக் காலாலுதைத்த சிவனுக்கு வணக்கம்.

**காமநாசனாய சுத்3த4 கர்மணே நம: சிவாய**
**ஸாமகா3ன ஜாயமானசர்மணே நம: சிவாய ।**
**ஹேமகாந்தி சாகசக்யவர்மணே நம: சிவாய**
**ஸாமஜாஸுராங்க3லப்3த4 சர்மணே நம: சிவாய ॥** 7

காமனைக் காய்ந்தவனும் தூய்மைப்படுத்தும் செயல்களைச் செய்கின்றவனுமான சிவனுக்கு வணக்கம்; சாமவேத கானத்தால் மகிழ்கின்ற சிவனுக்கு வணக்கம்; பொன்னொளியின் மினுமினிப்பால் சூழப்பட்ட சிவனுக்கு வணக்கம்; கஜாசுரனின் அங்கத்தினின்றும் பெறப்பட்ட தோலை (அணிந்தவனுக்கு) வணக்கம்.

**ஜன்மம்ருத்யுகோ4ரது: க2ஹாரிணே நம: சிவாய**
**சின்மயை கரூபதே3ஹதா4ரிணே நம: சிவாய ।**
**மன்மனோரதா2வபூர்த்தி காரிணே நமசிவாய**
**ஸன்மனோக3தாய காமவைரிணே நம: சிவாய ॥** 8

பிறப்பிறப்பென்னும் கோரமான துக்கத்தைப் போக்குகின்ற சிவனுக்கு வணக்கம்; ஞானமே உருவான உடலைத் தாங்கியுள்ள சிவனுக்கு வணக்கம்; எனது எண்ணத்தை நிறைவேற்றுகின்ற சிவனுக்கு வணக்கம்; நன்மக்களின் உள்ளத்தில் உறைபவனும் மன்மதனின் எதிரியுமாகிய சிவனுக்கு வணக்கம்.

**யக்ஷராஜப3ந்த4வே த3யாலவே நம: சிவாய**
**த3க்ஷபாணிசோபி4 காஞ்சனாலவே நம: சிவாய ।**
**பக்ஷிராஜவாஹஹ்ருச்ச2 யாலவே நம: சிவாய**
**அக்ஷபா2ல வேதபூததாலவே நம: சிவாய ॥** 9

குபேரனுக்குச் சுற்றமாயும் அருள்புரிவோனாயுமுள்ள சிவனுக்கு வணக்கம்; வலது கரத்தில் விளங்கும் பொற்குடுவையை உடைய சிவனுக்கு வணக்கம்; கருடவாகனனாகிய திருமாலின் இதயத்தில் சயனித்திருக்கும் சிவனுக்கு வணக்கம்; நெற்றிக்கண்ணையும், வேதமோதுவதால் புனிதமான வாயையும் பெற்ற சிவனுக்கு வணக்கம்.

**த3க்ஷஹஸ்தநிஷ்ட2 ஜாதவேத3ஸே நம: சிவாய**
**அக்ஷராத்மனே நமத்3பி3டௌ3ஜஸே நம: சிவாய ।**
**தீ3க்ஷிதப்ரகாசிதாத்மதேஜஸே நம: சிவாய**
**உக்ஷராஜவாஹதேஸதாம் க3தே நம: சிவாய ॥** 10

வலக்கரத்தில் அழலேந்திய சிவனுக்கு வணக்கம்; நித்திய பரமாத்மாவும் இந்திரனால் வணங்கப்பெற்றவருமான சிவனுக்கு வணக்கம்; தீக்கை பெற்றவர்களிடத்தே தன் பேரொளியைப் பிரகாசிக்கச் செய்யும் சிவனுக்கு வணக்கம்; இடப வாகனனும், நன்மக்களுக்குப் புகலிடமாயும் இருக்கும் சிவனுக்கு வணக்கம்.

**ராஜதாசலேந்த்[3]ரஸா நுவாஸினே நம: சிவாய**
**ராஜமானநித்யமந்த[3] ஹாஸினே நம: சிவாய ।**
**ராஜகோரகாவதம்ஸ பா[4]ஸினே நம: சிவாய**
**ராஜராஜமித்ரதாப்ரகாசினே நம: சிவாய ॥** 11

வெள்ளியங்கிரியின் பக்கலில் வசிக்கின்ற சிவனுக்கு வணக்கம்; பிரகாசிக்கின்றவனும் என்றும் புன் சிரிப்புடன் கூடியவனுமான சிவனுக்கு வணக்கம்; சந்திரப்பிறையைத் தலையில் சூடியவனான ஒளிபொருந்திய சிவனுக்கு வணக்கம்; குபேரனிடம் நட்பிலே பிரகாசிக்கும் சிவனுக்கு வணக்கம்.

**தீ[3]னமானவாலிகாமதே[4]னவே நம: சிவாய**
**ஸூனபா[3]ண தா[3]ஹக்ருத்க்ருசானவே நம: சிவாய**
**ஸ்வானுராக[3] ப[4]க்தரத்னஸானவே நம: சிவாய**
**தா[3]னவாந்த[4] காரசண்ட[3]பா4னவே நம: சிவாய ॥** 12

இரக்கத்திற்குரிய மக்கட் சமூகத்திற்கு காமதேனுவாக விளங்கும் சிவனுக்கு வணக்கம்; மலர்க்கணைகளை உடைய (மன்மதனை) எரியூட்டிய அக்கினியாய சிவனுக்கு வணக்கம்; தன்னிடத்து அன்பு செலுத்தும் பக்தர்களுக்கு மேரு மலை போன்றிருக்கும் சிவனுக்கு வணக்கம்; அரக்கரெனும் இருளைப் போக்கும் சூரியனாக விளங்கும் சிவனுக்கு வணக்கம்.

**ஸர்வமங்க[3]ளாகுசாக்[3]ரசாயிநே நம: சிவாய**
**ஸர்வதே[3]வதாக[3]ணாதிசாயிநே நம: சிவாய ।**
**பூர்வதே[3] வநாசஸம்விதா[4]யிநே நம: சிவாய**
**ஸர்வமன்மனோஜப[3]ங்கதா[3]யிநே நம: சிவாய ॥** 13

'ஸர்வமங்களா' என்னும் பார்வதி தேவியின் மார்பகத்திலே சயனித்துக் கொண்டிருக்கும் சிவனுக்கு வணக்கம்; எல்லா தேவதை கணங்களுக்கும் மேம்பட்டவனான சிவனுக்கு வணக்கம்; அசுரகுலத்தை அழித்த சிவனுக்கு வணக்கம்; காமத்தின் விளைவுகளனைத்தையும் முறியடிக்கின்ற சிவனுக்கு வணக்கம்.

**ஸ்தோகப[4]க்திதோsபி ப[4]க்தபோஷிணே நம: சிவாய**
**மாகரந்த[3]ஸார வர்ஷிபா[4]ஷிணே நம: சிவாய ।**
**ஏகபி[3]ல்வதா[3]னதோsபி தோஷிணே நம: சிவாய**
**நைகஜன்மபாபஜால சோஷிணே நம: சிவாய ॥** 14

சிறிதளவு பக்தி இருந்தாலும் அத்தகைய பக்தர்களைப் போஷிக்கின்ற சிவனுக்கு வணக்கம்; தேன்ரசத்தைப் பிலிற்றும் இன்சொல்லை உடைய சிவனுக்கு

வணக்கம்; ஒரு வில்வத்தை அளித்தாலும் அதனால் மகிழ்கின்ற சிவனுக்கு வணக்கம்; அனேக பிறப்புக்களில் சேர்ந்த பாபக்கூட்டத்தை வற்றச் செய்யும் சிவனுக்கு வணக்கம்.

**ஸர்வஜீவரக்ஷணைகசீலினே நம: சிவாய**
**பார்வதீப்ரியாய ப4க்தபாலினே நம: சிவாய ।**
**துர்வித3க்3த4தை3த்ய ஸைந்ய தா3ரிணே நம: சிவாய**
**சர்வரீசதா4ரிணே கபாலினே நம: சிவாய ॥** 15

எல்லா உயிர்களையும் காப்பதையே நெறியாகக் கொண்ட சிவனுக்கு வணக்கம்; பார்வதியிடத்தில் பிரியமுள்ளவனும் பக்தர்களைக் காத்தருள்பவனுமான சிவனுக்கு வணக்கம்; கொடிய அசுர சேனைகளை அழித்த சிவனுக்கு வணக்கம்; இரவின் நாயகனான சந்திரனையும், கபாலத்தையும் தரித்துள்ள சிவனுக்கு வணக்கம்.

**பாஹி மாம் உமாமனோஜ்ஞதே4ஹ தே நம: சிவாய**
**தேஹி மே வரம் ஸிதாத்3ரிகே3ஹதே நம: சிவாய ।**
**மோஹிதர்ஷிகாமினீஸமூஹ தே நம: சிவாய**
**ஸ்வேஹிதப்ரஸந்ந காமதோ3ஹ தே நம: சிவாய ॥** 16

உமையோடு கூடியதான அழகிய தேகத்தை உடையவனே என்னைக் காப்பாற்று; சிவனாகிய உமக்கு வணக்கம்; வெண் (பனி) மலையில் வசிப்போனே! எனக்கு வரமருள்வாய். சிவனாகிய உமக்கு வணக்கம்; ரிஷிபத்தினிக் கூட்டத்தை மோகமறச் செய்தவனே, சிவனாகிய உமக்கு வணக்கம்; நீர் விரும்பியதை யெல்லாம் முடிப்பதனால் பிரசன்னனாயிருக்கிறீர், வேண்டியதையெல்லாம் தருகின்றவனாகிய சிவனாம் உமக்கு வணக்கம்.

**மங்க3ளப்ரதா3ய கோ3துரங்க3 தே நம: சிவாய**
**க3ங்க3யா தரங்கி3தோத்தமாங்க3 தே நம: சிவாய**
**ஸங்க3ரப்ரவ்ருத்தவைரிப4ங்க3தே நம: சிவாய**
**அங்க3 ஜாரயே கரேகுரங்க3தே நம: சிவாய ॥** 17

விரைவாகச் செல்லும் இடபத்தை உடையவனே! மங்களத்தைத் தருபவனான சிவனுக்கு வணக்கம்; கங்கையின் அலைபாயும் முடியை உடையவனே! சிவனாகிற உமக்கு வணக்கம்; போரில் ஈடுபட்ட எதிரிகளை ஒடுக்கியவனே; சிவனாகிற உமக்கு வணக்கம்; மன்மத விரோதியே, மானேந்திய கையனே, சிவனாகிற உமக்கு வணக்கம்.

**ஈஹிதக்ஷணப்ரதா3ன ஹேதவே நம: சிவாய**
**ஆஹிதாக்னிபாலகோக்ஷகேதவே நம: சிவாய**
**தே3ஹகாந்திதூ4தரௌப்யதா4தவே நம: சிவாய**
**கே3ஹது: க2புஞ்ஜதூ4மகேதவே நம: சிவாய ||** 18

வேண்டியதை அக்கணத்திலேயே தரவல்லவனாகிய சிவனுக்கு வணக்கம்; தீயோம்பவோரைக் காப்பவனும் இடபக்கொடியோனுமாகிய சிவனுக்கு வணக்கம்; தனது தேககாந்தியினால் வெள்ளி உலோகத்தை வெல்லக்கூடிய சிவனுக்கு வணக்கம்; இல்வாழ்வின் துக்கத் தொகுதியினை அழிக்கும் தீயாகிய சிவனுக்கு வணக்கம்.

**த்ர்யக்ஷ தீ3னஸக்த்ருபாகடாக்ஷ தே நம: சிவாய**
**த3க்ஷஸப்ததந்து நாசத3க்ஷ தே நம: சிவாய |**
**ருக்ஷராஜபா4நுபாவகாக்ஷ தே நம: சிவாய**
**ரக்ஷ மாம் ப்ரபந்நமாத்ர ரக்ஷ தே நம: சிவாய ||** 19

முக்கண்ணனே, எளியவருக்கு நன்மை பயக்கும் வண்ணம் திருவருட் பார்வையை நல்கும் சிவனுக்கு வணக்கம்; தக்கன் வேள்வியை அழிப்பதில் சமர்த்தனான சிவனுக்கு வணக்கம்; சந்திரன் சூரியன், அக்கினி ஆகியவற்றை (முக்) கண்களாக உடைய சிவனுக்கு வணக்கம்; சரணடைந்த மாத்திரத்தே காத்தருளுகின்றவனே, என்னைக் காத்தருள்வாயாக; சிவனாகிய உமக்கு வணக்கம்.

**ந்யங்குபாணயே சிவங்கராய தே நம: சிவாய**
**ஸங்கடாப்3தி4தீர்ண கிங்கராய தே நம**: சிவாய |
**கங்கபீ4ஷிதாப4யங்கராய தே நம: சிவாய**
**பங்கஜாநநாய சங்கராய தே நம: சிவாய ||** 20

மானைக் கையில் தாங்குபவனே, மங்களத்தைச் செய்கின்ற சிவனாகிய உமக்கு வணக்கம்; இடரெனும் கடலைக் கடத்துவிப்பதில் பணியாளெனப் பணியாற்றும் சிவனுக்கு வணக்கம்; யமனிடம் அஞ்சுவோருக்கு அபயம் தருகின்ற சிவனுக்கு வணக்கம்; தாமரை போன்ற அழகிய முகத்தை உடையவனும் நல்லனவற்றையே செய்பவனுமான சிவனுக்கு வணக்கம்.

**கர்மபாசநாச நீலகண்ட2 தே நம: சிவாய**
**சர்மதா3ய வர்யப4ஸ்ம கண்ட2தே நம: சிவாய |**
**நிர்மமர்ஷிஸேவிதோபகண்ட2 தே நம: சிவாய**
**குர்மஹே நதீர் நமத்3வகுண்ட2 தே நம: சிவாய ||** 21

கருமமெனும் பாசத்தை நாசம் செய்பவனும் திருநீலகண்டனுமான சிவனுக்கு வணக்கம்; சுகத்தை அளிப்பவனும் மன்மதன் சாம்பலை கண்டத்தில் அணிந்தவனுமான சிவனுக்கு வணக்கம்; 'எனது' என்ற பற்றற்ற ரிஷிகளால்

அருகேயிருந்து சேவிக்கப்படுகின்ற சிவனுக்கு வணக்கம்; வணங்குவோரிடத்து சோம்பலின்றி (அருள்பவனாக) உள்ளவனே, உமக்கு வணக்கம் பல சிவனாகிய உமக்கு வணக்கம்.

**விஷ்டபாதி4பாய நம்ரவிஷ்ணவே நம: சிவாய**
**சிஷ்டவிப்ரஹ்ருத3கு3ஹாசரிஷ்ணவே நம: சிவாய ।**
**இஷ்டவஸ்துநித்யதுஷ்டஜிஷ்ணவே நம: சிவாய**
**கஷ்டநாசனாய லோகஜிஷ்ணவே நம: சிவாய ॥** 22

தேவலோகத்ததிபனும் விஷ்ணுவால் வணங்கப்படுகின்றவனுமான சிவனுக்கு வணக்கம்; ஒழுக்கத்தில் சிறந்த அந்தணர்களின் இதயக்குகையில் சஞ்சரித்துக் கொண்டிருக்கும் சிவனுக்கு வணக்கம்; வேள்வியில் இட்ட பொருளை ஏற்று என்றும் மகிழ்கின்றவனும் அனைத்தையும் வென்றவனுமான சிவனுக்கு வணக்கம்; இடர்களைவோனும் உலகியலை வென்றவனுமான சிவனுக்கு வணக்கம்.

**அப்ரமேய தி3வ்யஸுப்ரபா4வதே நம: சிவாய**
**ஸத்ப்ரபன்னரக்ஷணஸ்வபா4வ தே நம: சிவாய ।**
**ஸ்வப்ரகாச நிஸ்துலானுபா4வ தே நம: சிவாய**
**விப்ரடி3ம்ப4த3ர்சிதார்த்3ரபாவ தே நம: சிவாய ॥** 23

அளவிடற்கரியனும், திவ்யமான நற்பெருமையுடையவனுமான சிவனுக்கு வணக்கம்; அடைக்கலமடைந்த நல்லோர்களைக் காக்கும் இயல்பை உடைய சிவனுக்கு வணக்கம்; சுயம்பிரகாசமாயும் இணையற்ற வீரியம் உடையவனாயும் இருக்கிற சிவனுக்கு வணக்கம்; அந்தணச் சிறுவனுக்கு (மார்க்கண்டேயனுக்கு) அருட்பான்மை காட்டிய சிவனுக்கு வணக்கம்.

**ஸேவகாய மே ம்ருட3 ப்ரஸீத3 தே நம: சிவாய**
**பா4வலப்4ய தாவகப்ரஸாத3 தே நம: சிவாய ।**
**பாவகாக்ஷ தேவபூஜ்யபாத3 தே நம: சிவாய**
**தாவகாங்க்4ரி ப4க்த த3த்தமோத3 தே நம: சிவாய ॥** 24

கருணாமூர்த்தியே, அடியேனாகிய எனக்கு அருள்புரிய வேண்டும். சிவனாகிய உமக்கு வணக்கம்; பக்தியினால் பெறக்கூடியது உமது அருள்; சிவனாகிய உமக்கு வணக்கம்; அக்கினிக் கண்ணனே, தேவர்கள் வழிபடும் திருவடியுடையோனே, சிவனாகிய உமக்கு வணக்கம்; தங்கள் திருவடிப்பேற்றினால் பக்தர்களை மகிழ்விப்பவனே, சிவனாகிய உமக்கு வணக்கம்.

**பு4க்தி முக்தி தி3வ்யபோ4கதா3யினே நம: சிவாய**
**சக்திகல் பிதப்ரபஞ்சபா4கி3னே நம: சிவாய**
**ப4க்தஸங்கடாபஹாரயோகி3னே நம: சிவாய**
**யுக்தஸந்மனஸ்ஸரோஜயோகி3னே நம: சிவாய ॥** 25

இம்மையின்பம், முக்தியின்பம், தேவலோக இன்பம் ஆகியவற்றை அருளும் சிவனுக்கு வணக்கம்; (தனது மாயா) சக்தியால் தோற்றுவிக்கப்பட்ட பிரபஞ்சத்தை உடையவனான சிவனுக்கு வணக்கம்; பக்தர்களின் இடர்களைப் போக்குவதில் ஈடுபட்டுள்ள சிவனுக்கு வணக்கம். யோக நெறியில் நிற்கும் மேன்மக்களின் மனமாகிற தாமரையில் பொருந்தியிருக்கும் சிவனுக்கு வணக்கம்

**அந்தகாந்தகாய பாபஹாரிணே நம: சிவாய**
**சந்தமாய த3ந்திசர்மதா4ரிணே நம: சிவாய ।**
**ஸந்ததாச்ரிதவ்யதா2 விதா3ரிணே நம: சிவாய**
**ஜந்துஜாதநித்யஸௌக்2யகாரிணே நம: சிவாய ॥** 26

கூற்றுவனுக்கும் கூற்றுவனாயும் பாபத்தைப் போக்குகின்றவனாயுமுள்ள சிவனுக்கு வணக்கம்; மேலான மக்கள் சொரூபனாயும் யானைத்தோலை தரிக்கின்றவனாயுமுள்ள சிவனுக்கு வணக்கம்; என்றும் தன்னிடம் புகலடைவோரின் துன்பத்தைப் போக்குகின்ற சிவனுக்கு வணக்கம்; எல்லா உயிர் வர்க்கங்களுக்கும் என்றும் நலம் புரிகின்ற சிவனுக்கு வணக்கம்.

**சூலினே நமோ நம: கபாலினே நம: சிவாய**
**பாலினே விரிஞ்சிமுண்ட3 மாலினே நம: சிவாய ।**
**லீலினே விசேஷருண்ட3 மாலினே நம: சிவாய**
**சீலினே நம : ப்ரபுண்யசாலினே நம: சிவாய ॥** 27

சூல மேந்தியவனே வணக்கம்; கபாலமேந்திய சிவனுக்கு வணக்கம்; காத்தற்றொழிலைச் செய்பவனே, பிரமனின் ஓட்டுமாலை யணிந்தவனே, சிவனாகிய உமக்கு வணக்கம்; திருவிளையாடல் புரிகின்றவனே, விசேடமான கபந்தமாலை யணிந்தவனே, சிவனாகிய உமக்கு வணக்கம்; சீலம் பொருந்தியவனே வணக்கம்; மிகுதியும் புண்ணியசாலியாகிய சிவனுக்கு வணக்கம்.

**சிவபஞ்சாக்ஷரமுத்3ரா சதுஷ்பதோ3ல்லாஸ பத்3யமணிக3டிதாம் ।**
**நக்ஷத்ரமாலிகாம் இஹ த3த4து3பகண்ட2ம் நரோ பவேத்-ஸோம: ॥** 28

எந்த ஒரு மனிதன் சிவபஞ்சாக்ஷரமான 'நமசிவாய' எனும் மந்திரத்தை முத்திரையாக ஒவ்வொரு அடியிலும் கொண்டதும், இரத்தினங்கள் போன்ற (இருபத்தேழு) பாக்களால் அமைக்கப்பெற்றதுமான இந்த நக்ஷத்திர மாலையை தனது கண்டத்தில் அணிகின்றானோ அவன் உமையொரு பாகனான சிவனே ஆவான்.

